[10th February 1959

*Sales-tax on milk*

* 170 Q.—Sri K. SATTANATHA KARAYALAR : கனம் கைத் தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) ராஜ்ய பால் உற்பத்தியாளர் யூனியனிடமிருந்தும், இதர பால் உற்பத்தியாளர்களிடமிருந்தும் பால் விற்பனைக்கு வரி எடுபட வேண்டுமென்று கோரி சமீபத்தில் வேண்டுகோள் வந்ததா ?

(ஆ) அப்படியானால் அதன்மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

The Hon. Sri R. VENKATARAMAN : (அ) No such representation has been received recently.

(ஆ) Does not arise.

Sri A. GOVINDASAMY : காங்கிரஸ் ஆட்சி வந்தால் பாலும் தேனுமாக ஓடுமென்று சொன்னார்கள். ஆகவே பாலுக்காவது வரியைக் குறைக்க அரசாங்கம் நடவடிக்கைகள் எடுக்குமா ?

The Hon. Sri R. VENKATARAMAN : காங்கிரஸ் அரசாங்கத்தில் வரி போட்டாலும் பாலும் ஓடும், தேனும் ஓடும்.

*House-sites for Harijans*

* 171 Q.—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Public Works be pleased to state the steps taken by the Government to assign house-sites to Harijans in Erode taluk, Coimbatore district?

The Hon. Sri P. KAKKAN : Under a rehabilitation scheme for relief of seepage-affected areas under the Bhavani Project, acquisition of house-sites was made in 57 cases in Erode taluk in Coimbatore district. Construction of colonies is in progress in 9 cases. In the other cases, steps are being taken to rehabilitate the Harijans.

Sri N. K. PALANISAMI : ஹரிஜனங்களுக்கு மனைகள் கட்ட இடங்கள் கோரி சுமார் ஆயிரம் விண்ணப்பங்களுக்கு மேல் வந்திருந்தும் இதுவரையில் நடவடிக்கைகள் எடுக்கப்படவில்லை. ஆகவே உடனடியாக வீடுகள் கட்ட இடம் கொடுப்பதற்கான உத்திரவை சர்க்கார் சீக்கிரம் போடுமா ?

The Hon. Sri P. KAKKAN : நான் சொன்ன பதிலில் 57 கேஸ் களில் நடவடிக்கைகள் எடுத்திருக்கிறார்கள் என்று கூறினேன். நான் சுற்றுப் பிரயாணம் செய்தபோது கலெக்டரிடம் சொல்லி பவானி ப்ராஜெக்ட் ஏரியாவில் ஹரிஜனங்களுக்கு மனைகட்டுகள் வழங்க துரிதமாக நடவடிக்கை கள் எடுக்க வேண்டுமென்றும், ஒதுக்கப்பட்டிருக்கும் பணத்தை மிச்சப் படுத்தக்கூடாதென்றும் சொல்லியிருக்கிறேன்.

Sri M. K. SOMASUNDARAM : ஈரோடு தாலுகாவில் மொத்தம் எத்தனை பேர்களுக்கு மனைக்கட்டுகள் வழங்க வேண்டுமென்று கணக் கெடுத்திருக்கிறார்கள் ? எத்தனை பேர்களுக்கு வழங்கப்பட்டிருக்கிறது ? இன்னும் எத்தனை பேர்களுக்கு வழங்கப்படும் ?

The Hon. Sri P. KAKKAN : தனிக் கேள்வி வேண்டும்.

Sri P. G. MANICKAM : லோயர் பவானி வாய்க்கால் நீர் கசிவால் சேதமடைந்த வீடுகளைக் கட்டுவதற்காக ஒதுக்கப்பட்ட தொகை யில் மிச்சம் இருக்கிறதா, அல்லது எல்லாம் செலவழிக்கப்பட்டு விட்டதா ?

The Hon. Sri P. KAKKAN : தனிக் கேள்வி வேண்டும்.